நூலாசிரியர்

மார்கோ லெண்டல்

தமிழாக்கம்

அனுமிதா

வரைபடம்

ஜரின் டிவாஸ்

# ஹெலன் கெல்லர்



# அத்தியாயம் 1

வெப்பமான கோடை பருவம். வருடம் 1880.
கீழ் தெற்கில், சிறிய ஊரான அலபாமாவில்
ஆரோக்கியமான ஒரு பெண் குழந்தை பிறந்தாள்.
அவளின் பெற்றோர்கள் அவளை மிகவும்
கொண்டாடினார்கள். அவள் பெயர்
ஹெலன் கெல்லர்.



பின்னர் குழந்தை நோய்வாய்ப்பட்டது. அவளுக்கு அப்பொது வயது இரண்டு கூட ஆகவில்லை. நாளுக்கு நாள் அவளது காய்ச்சல் அதிகமாயிற்று. ஊழியர்கள் உதவ முயன்றனர். பெற்றோர் போராடினார்கள்.

மருத்துவர் தலையை ஆட்டிவிட்டார். "இதற்கு மேல் நாம் எதுவும் செய்ய முடியாது,

குழந்தை பிழைப்பதே சந்தேகம்" என்றார்.

ஹெலன் பிழைத்துவிட்டாள்.

ஆனால், அவளிடம் மாற்றல்

தெரிந்தது.

“ஏதோ சரியாக இல்லை”,

அவளுடைய அம்மா கூறினார்.

கடைசியில் மாற்றத்தை

புரிந்துக் கொண்டார்கள்.

குழந்தை செவிடாகவும்,

குருடாகவும் இருந்தாள்.



குழந்தை சிறுமியாக வளர்ந்தாள்.
பெற்றோர்கள் மன
வருத்தமடைந்தார்கள்.

ஹெலன், அடிக்கடி அழுதாள்;
அம்மாவிடமே ஒட்டிக்கொண்டாள்.”

“குழந்தை எது கேட்டாலும்
கொடுங்கள்”, என்று தந்தை கூறுவார்.

செவிடாகவும், ஊமையாகவும் இருந்த போதிலும், ஹெலன்

புத்திசாலியாக இருந்தாள். மற்றவர்களுடைய பாங்கை அப்படியே செய்து காண்பிப்பாள். தன்னுடைய தந்தையின் மூக்குக் கண்ணாடியைப் போட்டுக் கொண்டு , செய்திதாளை கையில் பிரித்து வைத்துக் கொண்டு அவரை போல் பாவனை செய்வாள்.



பலரும் ஹெலன் எதையுமே கற்றுக் கொள்ள முடியாது என்று தான் நினைத்தார்கள். ஆனால் அவளது தாயார் அதை ஒத்துக்கொள்ளவில்லை. "ஹெலன் மிகவும் புத்திசாலி," என்று சொன்ன அவர், "ஆனால் அவளுக்குக் எப்படி கற்றுக் கொடுப்பது; அவளால் மற்றவர்களைப் புரிந்துக் கொள்ள முடியாதே" என்று கவலைப்பட்டார்.

# அத்தியாயம் 2

வளர, வளர ஹெலன் மூர்க்கமாக கட்டுப்பாடு இல்லாமல் இருந்தாள். யாரும் அவளுடைய தலைமுடியை சீவ விடமாட்டாள். அவளுடைய துணி எப்போதும் அழுக்காகவே இருந்தது.



ஹெலனுக்கு அடிக்கடி கோபம் வரும். சில நேரங்களில் கீழே விழுந்து புரளுவாள்.

அவளுக்கு ஒரு தங்கை பிறந்தாள். ஹெலனுக்கு அது பிடிக்கவில்லை. ”பாவம் என்னுடைய ஹெலன்; எப்போதும் ஒரு குழந்தை இப்போது என் மடியில் இருக்கிறாள்”,என்று அவளுடைய அம்மா வருத்தப்பட்டாள்.

ஒரு நாள் குழந்தையை, அவள் தொட்டிலிலிருந்து கீழே தள்ளி விட்டுவிட்டாள்.“ஹெலன் அப்படி செய்யக் கூடாது”, அலறினாள் அம்மா. ”நாம் என்ன செய்ய முடியும், யாரையாவது உதவுவதற்குத் தேடதான் வேண்டும்” என்றாள்.

தொலைபேசியைக் கண்டுபிடித்த, புகழ் பெற்ற, க்ரஹாம் பெல் என்பவர் செவிடர்களுக்குக் கற்று கொ டுக்கும் ஆசிரியரும் கூட.அவர், ஹெலனுக்கு உதவ முடியலாம் என்ற நம்பிக்கையில் அவரை சந்திக்க கெல்லர் தம்பதிகள், வாஷிங்டன் நகரத்திற்கு சென்றார்கள்.



ஹெலனால் கற்றுக் கொள்ள முடியும்;
ஆனால் அதற்கான தனிதுறை நிபுணரிடம் தான் கற்க முடியும் என்றவர்,
மேஸசெட்ஸில் உள்ள போஸ்டன்நகரத்தில் பெர்கின்ஸன் என்கிற குருடர்களுக்கான நிறுவனத்திலிருந்து ஒரு ஆசிரியரை
அனுப்பும்படி கேளுங்கள் என்றார்

பெர்கின்ஸ் பள்ளிக்கு, கெல்லர் கடிதம் எழுதினார். உடனே, அங்கிருந்து பதிலும் வந்துவிட்டது. நல்ல காலம், பள்ளியிலிருந்து ஆசிரியர் ஒருவரை அனுப்புவதாக எழுதியிருக்கிறார்கள் என்றார் ஹெலனின் தந்தை.



# அத்தியாயம் 3

· 1887 மார்ச் மாதம் 3-ம் தேதி, பிற்பகல், அந்த ஆசிரியர் வந்தார். தன் வீட்டு வாசலில் நின்று கொண்டிருந்த ஹெலன், திடீரென காலடி சப்தம் கேட்டு, தன்னுடைய தாயார் என நினைத்து ஓடினாள்.



யாரோ ஹெலனின் கையை பிடித்து, தன் பக்கம் இழுத்துக் கொண்டார். அது அவளுடைய தாய் இல்லை என்று தெரிந்ததும் ஹெலன் விலகி சென்றாள். ஆம், அதுதான் ஆன் சலிவன், அவளுடைய ஆசிரியர். போஸ்டனில் இருந்து வந்த இளம் பெண், ஹெலனை அன்புடன் நேசித்து ஒரு புதிய உலகத்தை அவளுக்குக் காண்பிக்க வந்தவள்.

தன் பிற் காலத்தில் இந்த நாளை, ஹெலன் தனக்கு விழிப்புணர்வு ஏற்பட்ட நாளாகக் குறிப்பிடுவாள்

சலிவன் ஹெலனிடம் தான் வந்த அன்றே ஒரு பொம்மையைக் கொடுத்துவிட்டு, பொ-ம்-மை என்று கூறினார். அந்த வார்த்தையை, ஹெலனின் உள்ளங்கையில் விரல்களால் ஒரு சிறப்பு எழுத்து முறையின் மூலம் எழுதி உச்சரித்தார்.

ஹெலன் தன் ஆசிரியர் செய்வதை அப்படியே பின்பற்றி, பொ-ம்-மை என்று உச்சரித்தாள். ஆனால், தான் என்ன செய்கிறொம் என்பதை துளியும் புரிந்துக் கொள்ளவில்லை.



ஹெலன் எப்படி கட்டுப்பாடு இல்லாமல் வளர்ந்திருக்கிறாள் என்பதை தான் வந்த சில நாட்களிலேயே சலிவன் புரிந்துக் கொண்டார். இரவு உணவு சாப்பிட, உட்காராமல்,, மேசையைச் சுற்றி சுற்றி வந்து, ஒவ்வொருவரின் தட்டிலிருந்தும் சாப்பிடுவாள்; அதுவும் கையால் சாப்பிடுவாள். இப்படி அவள் ஒழுங்கீனமாக நடப்பதை அனுமதிப்பது அவளுக்கு நல்லது இல்லை என்று சலிவன் குடும்பத்தினரிடம் கூறினார்; மேலும், அவள் எப்படி நடந்துக் கொள்ள வேண்டும் என்பதை கற்பிக்கவெண்டும் என்று வலியுறுத்தினார்



ஒரு பெரிய போராட்டமே நடந்தது. அவளுக்குக் கேட்க முடியாவிட்டாலும், ”ஹெலன், நான் சொல்வதைதான் நீ செய்ய வேண்டும்”, என்று ஆசிரியர் ஸலிவன் கத்தினார். அவளை நாற்காலியில் அமர்த்தினால், மீண்டும் எழுந்து நின்றாள். ‘ஸ்பூனை’ கொடுத்தால் அதை தூக்கி போட்டாள். உணவை தட்டில் வைத்து கொடுத்தால், அதை யும் ஒரு மூலயில் வீசி எறிந்தாள்.

சாப்பிடும் போதெல்லாம், சண்டைதான். ஆனால் ஸலிவன் ஜெயித்துக் கொண்டிருந்தார். முடிவில் ஹெலன் நாற்காலியில்  உட்கார்ந்து சாப்பிட்டாள்.



தாயார் மிக வேதனை அடைந்தாள். ”ஆன், நீங்கள் மிகவும் கண்டிப்பாக இருக்கிறீர்கள்”,  ஸ்ரீமதி கெலர் கூறினார். ஆனால் ஆசிரியர் சலிவன் தளரவில்லை. “ஹெலனை ஒரு கட்டுப்பாட்டிற்குள் கொண்டு வராமல் என்னால் அவளுக்கு எதுவும் கற்று தர இயலாது “ என்று சொல்லிவிட்டார்





ஹெலனின் தந்தை, மிஸ்டர் கெல்லரை, ஸலிவன் அணுகி  ”ஹெலனுடன் சில நாட்கள் நான் தனியாக இருக்க விரும்புகிறேன்”, என்று  கூறினார்; பிறகு, “தோட்டத்தில் இருக்கும்  சிறிய வீட்டிற்கு நாங்கள் போகலாமா”,  என்று ஸலிவன் கேட்க, அவர் “இரண்டு வாரத்திற்கு மேல் இருக்க அனுமதிக்க மாட்டேன்”, என்று சொன்னார்.

ஹெலனை வண்டியில் ஏற்றிக் கொண்டு, கெல்லர் தம்பதிகள் வெகு தூரம் சுற்றினார்கள். பிறகு, தோட்டதில் இருந்த சின்ன வீட்டுக்குள் போனார்கள். அப்போது தான்,  அவளுக்கு தான் வீட்டிற்கு அருகிலேயே இருக்கிறோம் என்று புரியாது

## அத்தியாயம் 4

ஸலிவன் மிக்க கண்டிப்புடன் இருந்த போதும், ஹெலனிடம் பாசத்துடன் இருந்தார். ஹெலனுக்கும் அவரைப் பிடித்துவிட்டது. இரவும்-பகலுமாக, ஸலிவன் ஹெலனுக்கு வார்த்தைகளை உச்சரித்துக் கொண்டேயிருந்தார்.

ம்- அ -ண்-இ -க்-அ -ள்;
ந்-ஆ- ய்-;
த் – அ - ண் – ண் - ஈ – ர்

ஹெலன் திருப்பி அதை தன் ஆசிரியரிடம் கையில் அப்படியே எழுதி காண்பித்தாலும், தான் என்ன செய்கிறோம் என்றே அவளுக்குப் புரியவில்லை. “ஹெலன், இந்த வார்த்தைள் ஒவ்வொன்றிற்கும் ஒரு அர்த்தம் உண்டு”, என சலிவன் கூறினார். அவளுக்கு அதை புரிய வைப்பதற்கு மிகவும் மன்றாடினார்.





இரண்டு வாரங்கள் ஓடிவிட்டன. ஹெலனும், ஸலிவனும் பெரிய வீட்டிற்குத் திரும்பி வந்தனர். இன்னும் ஹெலன், கையில் எழுதும் குறியீடுகளைப் புரிந்துக் கொள்ளவேயில்லை. அதற்காக, அவளுடைய ஆசிரியர் மனம் தளரவில்லை. ஒரு நாள், அவள் ஹெலனுக்கு,

த – ண் – ணீ – ர் ; கு – வ – ளை

என இரு வார்த்தைகளைத் திருப்பி-திருப்பி கற்றுக் கொடுக்கும் போது, ஹெலன் புரிந்துக் கொள்ள முடியாமல் குழப்பிக் கொண்டிருந்தாள்.மிகவும், களைத்துவிட்டாய்; உலாவுவதற்கு வெளியில் தோட்டத்திற்குப் போகலாம் ” என்று ஸலிவன் அழைத்து சென்றார்

அன்று சற்றே வெய்யில் காய,, வெளியில் சுகமாக இருந்தது. ஹெலனும், அவளுடைய ஆசிரியரும் தோட்டத்திற்கு வந்தார்கள். தண்ணீர் பம்ப் அருகில் வந்ததும், ஸலிவனுக்கு ஒரு யோசனை உதித்தது. தண்ணீர் பம்பை இயக்க ஆரம்பித்தார்; தண்ணீர் கொட்ட ஆரம்பித்தது; ஸலிவன், ஹெலனின் கையை தண்ணீரில் வைத்து, கூடவே தண்ணீரின் அக்ஷரத்தையும் அவள் கையில் எழுதினார்:

இது தண்ணீர், ஹெலன்!

த் – அ – ண் – ண் - ஈ – ர்"



திடீரென்று, ஹெலன் புரிந்துக் கொண்டுவிட்டாள்.

ஆம், ஈரமாக தன் கையில் ஓடியது தண்ணீர் என்று.

மேலும், தண்ணீர் என்பது ஒரு வார்த்தை என்பதையும்

அறிந்துக் கொண்டாள். உலகத்தில் மிக முக்கியமானது

இந்த வார்த்தைகள் தான்; தனக்கு தெரிந்துக் கொள்ள

விரும்புவதை இந்த வார்த்தைகள் மூலம்

கற்றுக்கொள்ளலாம் என்று உணர்ந்துக் கொண்டாள்.

தன் வாழ்க்கையில் பின்னர்,

”என் இருதயம் மலர்ந்தது”.

“இறந்து, மறு பிறவி எடுத்தது போல் உணர்ந்தேன்”

என்று எழுதினாள்.



உடனடியாக, ஹெலனுக்கு எல்லா வார்த்தைகளின் பெயரையும் தெரிந்துக் கொள்வதற்கு அடங்கா ஆவல் உண்டாயிற்று.

ப் – ஊ  பூ

த் – அ – ர் – அ – ஐ  தரை

பிறகு ஸலிவனைச் சுட்டி காட்டினாள்.

ஸலிவன் ஆ – ச் – இ – ர் – இ – ய் – அ – ர்

என்று கையில் எழுதினார்.



ஹெலனுக்கு நன்றாக புரிந்துவிட்டது என்று தெரிந்ததும், ஸலிவன் மகிழ்ச்சியில் பூரித்துப் போனார்.

“என் இருதயம் வெடித்துவிடும் போல் இருந்தது”. என்று எழுதினார்.

ஹெலனை அழைதுக் கொண்டு ஆன் சலிவன், வீட்டிற்குள் சென்றார். வெளியில் போன போது என்ன நடந்தது என்று எல்லோரிடமும் சொன்னார். ஹெலனுடைய அம்மா ஆனந்த கண்ணீர் விட்டார். “என் செல்ல கண்ணு’, ஹெலனை கட்டி அணைத்தார். பின், திருமதி கெல்லர் ஹெலனின் ஆசிரியர் பக்கம் திரும்பி, “மிஸ் ஆன், நீங்கள் செய்தது ஒரு வியத்தகு நிகழ்ச்சி”, என்று கூறினார்..



உண்மையில் அன்று நடந்தது அற்புத சம்பவம் தான். ஆனால் இது தான் ஆரம்பம். ஹெலன் கெல்லெரின் எதிர்கால வாழ்வு முழுவதும் பல அற்புதங்கள் நிகழ்ந்தன.

# ஹெலன் கெல்லெர் 1880-1968

அடுத்து வந்த வருடங்களில் ஹெலென் படித்து, எழுத  கற்றுக் கொண்டதுடன், பேசவும்  தெரிந்துக் கொண்டாள்.  பள்ளிக்கூடம் சென்ற பிறகு ‘ரேட்க்ளிஃப்‘ கல்லூரியில் ஹானர்ஸ்’ வாங்கி பட்டம் பெற்றாள். அவள்  படித்து பட்டம் பெருவதற்கு, ஆன் சலிவன்  உதவி செய்தார். ஆசிரியர் இறக்கும் வரை, ஐம்பது வருடங்கள் இருவரும் ஒன்றாகவ இருந்தார்கள்.





## ஒரே கையில் ஆங்கில எழுத்துக்களின் குறியீடுகள்



ஹெலன் தனது வாழ்க்கையில் ஐந்து புத்தகங்களை எழுதினாள். பல இடங்களுக்கு பயணம் செய்தாள். மன்னர்களையும் ஜனாதிபதிகளையும் சந்தித்தாள். உலகெங்கிலும் இருந்த, மக்கள் குழுக்களுடன் உரையாடினாள். அவளுடைய பெரும்பாலான பணிகளை குருடர்களுக்கும், காது கேளாதவர்களுக்கும் உதவுவதற்காக செய்யப்பட்டன.
சுபாவத்தில் அன்புடனும், கனிவுடனும் பழகிய அவளை மக்களும் மிகவும் நேசித்தார்கள். ஹெலன் கெல்லரின் வாழ்க்கை பலருக்கு நம்பிக்கையூட்டியது.

A B C D
E F G H
I J K L
M N O P
Q R S T
U V W X
Y Z

**முற்றும்**